உ
கடவுள் துணை.

புதுவை தம்பு தெ கொண்டப்பா அவர்களின்
ஆறுவது புதல்வர்
ஸ்ரீமான் புதுவை ஜவியே தர்ம தெ கொண்டப்பா
அவர்களின்

# குடும்பசரிதக் கோர்வை மணிமாலை.

## இரண்டாம்பாகம்.

இது
ஸ்ரீமான் புதுவை ஆரோக்கியசாமி செட்டியார்
அவர்களின் புதல்வரும்,
அன்பார்ந்த மாதுலருமாகிய
**ஸ்ரீமான் பு. ஆ. ஞானய்ய செட்டியாரவர்களின்**
நற்கோரிக்கைக்கு இசைந்து
திரிசிரபுரம், ஆண்டானடிமை
ஸ்ரீமத் வயித்தியலிங்க சுவாமிகளாதீனத்தரும்
பெங்களூர் தண்டு, C. V. S. சபா செகண்டரி ஸ்கூல்
தலைமைத்தமிழ்ப் பண்டிதருமாகிய
**மதுரகவி, பு. நடராஜ உபாத்தியாயரவர்களால்**
இயற்றப்பட்டது.

1937.

ராஜூ அண்ட் கோ., பெங்களூர்.

கடவுள்துணை.

புதுவை தம்பு தெ கொண்டப்பா அவர்களின்

ஆறுவது புதல்வர்

**ஸ்ரீமான் புதுவை ஜவியே தர்ம தெ கொண்டப்பா**

அவர்களின்

# குடும்பசரிதக் கோர்வை மணிமாலை.

## இரண்டாம்பாகம்.

இது

ஸ்ரீமான் புதுவை ஆரோக்கியசாமி செட்டியார்

அவர்களின் புதல்வரும்,

அன்பார்ந்த மாதுலருமாகிய

**ஸ்ரீமான் பு. ஆ. ஞானய்ய செட்டியாரவர்களின்**

நற்கோரிக்கைக்கு இசைந்து

திரிசிரபுரம், ஆண்டானடிமை

ஸ்ரீமத் வயித்தியலிங்க சுவாமிகளாதீனத்தரும்

பெங்களூர் தண்டு, C. V. S. சபா செகண்டரி ஸ்கூல்

தலைமைத்தமிழ்ப் பண்டிதருமாகிய

**மதுரகவி, பு. நடராஜ உபாத்தியாயரவர்களால்**

இயற்றப்பட்டது.

1937.

ராஜூ அண்ட் கோ., பெங்களூர்.

# முகவுரை.

இப்பூவுலகில் அரிதாகிய மானிடப்பிறவி பெற்றும் ஜீவகாருண்ய பொது நிலைமையுற்று, வாழ்வோரே சிலராவர். அவர்களில் தென்னாட்டிற்சிறந்த நன்னாடாம், புதுவையம் பதியில், பொதுநல உழைப்பையே பெரிதெனப்பூண்டு, வாழ்ந்து வருபவருமாகிய, **ஸ்ரீமான் தருமராஜு கொண்டப்பா அவர்களின் 'குடும்ப சரித்திரக் கோர்வை மணிமாலை'**யின் இரண்டாம் பாகம் என்னும் இந்நன்னூலைக் காண மிகமகிழ்வுற்றனன்.

இவரது அரும் சரித்திரத்தை யாவரும் எளிதில் உணர்ந்து, அன்னவரைப்போல் பொது நல உழைப்பைப் பூண்டு, என்றும் நிலவும் கீர்த்தியுற்று வாழ்வார்களாக.

இக்காலத்தில் அநேகர் தோன்றி, அரிய செயல்களைப் புரிந்திருந்தும், பின்னர் அவர்களைப்பற்றி அவர் சந்ததியார்களுக்கோ, அவர் பிறந்த நாட்டினுக்கோ, ஞாபகச்சின்னம் ஒன்றுமேயில்லாமல் செய்கின்றனர். இது எல்லோரும் அறிந்த விஷயமே. இந்த விஷயத்தை ஐரோப்பியர் அவர்கள் பிறந்து வளர்ந்து நடந்துவந்த ஜீவியசரித்திரத்தையும் மற்றும் அவர்கள்செய்துள்ள காரியங்களையும், செவ்வனே சரித்திர ரூபமாகவோ, அல்லது செய்யுள் மூலமாகவோ, இயற்றியுள்ளார்கள். இது எல்லோரும் கவனிக்க தக்கதே.

இதைக்குறித்தே நமது அன்பரும், திரிசிரபுரம், உறையூர் வாணிபீடம் மகாவித்வான் ஸ்ரீமத் முத்துவீர உபாத்தியாயர் அவர்கள் பரம்பரையைச் சேர்ந்தவரும், முத்தமிழ்க்கவிஞரும் பல நூல்களின் ஆசிரியரும், பல தனவான்களால் தக்க சன்மானங்களும், தங்கத்தோடா முதலி

யனபெற்றவரும், பெங்களூர் தண்டு C. V. S. சபா செகண்டரி ஸ்கூல் தலைமைத் தமிழ்ப் பண்டிதருமாகிய **மதுரகவி பிரம்ஹஸ்ரீ பு. நடராஜ உபாத்தியாயரவர்கள்** செந்தமிழ் மொழியில் எளிய நடையில் கற்றோரும்மற்றோரும் படித்துணர இவ்விரண்டாம் பாகத்தை இயற்றியுள்ளார்.

இது படிக்கப்படிக்க இன்பத்தைத் தரும். இனிய பாக்கள் அலையின்மேல்அலைபோவதுபோலவும், மயிலினங்கள் அடிமேல் அடிவைத்துக் கம்பீரமாக நடப்பன போலவும், நீர் வீழ்ச்சியிலிருந்து விழும் ஜலமானது பால்போன்ற துளி கள்யீவது போலவும், வெண்மேகம் பொழிவது போலவும், பலவாறு நமது கண்ணுக்குத்தோன்றி ஆனந்தத்தை யுண்டாக்கின.

இந்நாளில் இவர் கவிதை இயற்றுந்திறம் யாவரும் போற்றத்தக்கதே என்று எடுத்துச்சொல்லவே முன் வந்துளேன். இதைப்போலவே மற்றுமுள்ள பெரியோர்கள் ஜீவிய சரித்திரத்தை இவரைக்கொண்டே செவிக்கினிய பாக்களாலும் இயற்றுவித்து, இசைத்தமிழ் ஓங்குமாறு செய்வார்களெனப் பெரிதும் பிரார்த்திக்கின்றனன்.

இங்ஙனம்,

"சமுதாயம்" பத்திராதிபரும், பெங்களூர்

"டெய்லி போஸ்டு" உபபத்திராதிபருமாகிய

S. D. **வெங்கடரமணன்**, B. A.,

பெங்களூர்.

18-8-37

பெங்களூர்.



ஜவியே தர்ம தெ கொண்டப்பா

1932



ஆரோக்கியமரி தெ கொண்டப்பா

1932



கடவுள் துணை.

## ஸ்ரீமான் புதுவை: கொண்டப்ப தருமராஜு செட்டியார் அவர்களின் குடும்ப சரிதக் கோர்வை மணிமாலை.

### இரண்டாம் பாகம்.

காப்பு.

**இன்னிசை வெண்பா.**

தர்மகுண சீலராய்த் தங்கிவள ரும்புதுவை
தர்மராஜு கொண்டப்பா வின்சரிதந் தன்னையே
சொற்றிடற்குச் சேசுபரன் றூயமலர்த் தாளிணையைப்
பற்றிடுவாய் நெஞ்சே பரிந்து. (1)

**1924ஸு ஏப்ரல்மீ 12உ முதன்மனைவி மரித்தப்பின் மறுவிவாகத்தை மறுத்து வருந்துதல்.**

**கலிவெண்பா.**

கண்ணுன தன்மனைவி காதற்றனம் மாள்மரிக்க
வெண்ணுத வெண்ணமெலா மெண்ணினுர்—புண்ணுகப்

பிள்ளைபெண்ணை வைத்திருப்போர் பின்னெருமணஞ்செயின்
சள்ளைவரு மென்றே தயங்கினுர்—விள்ளரிய

பின்மனைவி சொற்கேட்டுப் பிள்ளைகளைத் தான்வருத்துந்
தன்மையரை யேகண்டு தத்தளித்தார்—துன்புறத்து

மாற்றுந்தாய் வந்துமுன் மக்களையே மாய்க்குகொடுங்
கூற்றுந்தா யாகுமெனக் குண்ணினுர்—போற்றிருந்த

முன்தார மேதாரம் முற்றறியுந் தன்குணமே
பின்தார மாமென்றே பேசினுர்—நன்றுகக்

கொண்டான்குறிப்பறியாக் கோதையரைக் கொண்டென்னே
திண்டாட வைப்பரெனத் தேங்கினுர்—தொண்டாரும்

நன்மனைவி யாலே நடத்தலா மில்லறமே
துன்மனைவி யால்வருந் தோஷமென்று—ரின்பமதாய்
"இல்லாளகத்திருக்க வில்லாத தொன்றிலையென்
றில்லாளு மில்லாளே யாமாயின்—இல்லாள்
வலிகிடந்த மாற்ற முரைக்குமே லவ்வில்
புலிகிடந்த தூறாய் விடு" மென்—றுலகுதனி
லிப்படியெ லாவருமென் றேதடுத்தா ரேமணத்தை
செப்பரிய கொண்டப்பா தேர்ந்து. (2)

**நீதிதெரிவித்தல். சந்தவிருத்தம்.**

செங்க ணுள்ளவள் விகார ரூபமுளள்
தெரிவை சோதரமி லாதவள்
அங்கமீ ததிக முங்குறைந் திடுவள்
மாவுறுப் புடைய மூப்பினள்
பொங்கு கோபமுளள் மிகுகருப் புடையள்
புகல்பெ ருத்தகுர லுள்ளவள்
பங்க மேவுபிற ரால்வ ளர்ந்தவள்
பகர்ந்தமற் றிவர்கள் தீதரோ. (3)

என்ற நீதிகலை யேதெரிந் தவரு
மானதா லிதையு ணர்ந்துதான்
நன்றுநாற் குணமுங் கற்பிலங்குசுக
நங்கைமார் புவியி லரிதென
வென்றி யுற்றதிருச் சுற்ற முற்றவரும்
வேண்டியே மிக வருந்திட
வொன்றிலேனும் பற்றின்றியே மன
மொடுங்கியே யிருந்திட்டனர் (4)

**எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.**

தார்பூத்த தருமரா ஜுச்செட்டி யார்மூத்த
சகோ தரியா மிராஜம் மாளுஞ்
சீர்பூத்த வண்ணியாம் பாப்பாத்தி யம்மாளுந்
திகழ்தன்பிள் ளைகளைக் காக்க
பேர்பூத்த யில்லமதி லேவிட்டு பரிவுடன்
பிரிந்துசில க்ஷேத்தி ரத்திற்
கேர்பூத்த நண்பரொடு யாத்திரை புரிந்தனர்த
னின்னலத கற்ற வன்றே (5)

## சில க்ஷேத்திரயாத்திரை செய்தல்.

### கலிவெண்பா.

தருமரா ஜேந்திரர்முன் சாந்தகுண தேவி
யருமை தனம்மா ளகன்ற—வருத்தமதை
நீக்குதற் கெண்ணியே நேயமுறு நண்பருடன்
பார்க்குட் சிறந்த பதியாகும்—பேர்க்கொண்ட
வன்னை நகரமென்றி யாவர்களுங் கொண்டாடுஞ்
சென்னை நகரமதிற் சென்றனர்—பன்னரிய
வெங்களூ ரிந்த்ரபுரி யென்றெவரு மேபுகழும்
பெங்களூர் சென்றார் பிரியமொடு—தங்குஞ்
சுகிர்தபுரி யென்றுநனி சொல்லருஞ்சீ ருற்ற
மகிடபுரி சென்றார் மதிசோர்ந்—திகத்திலே
நன்மனைவிய கன்றபின்னர் நாமினி வேறொரு
பின்மனைவி நாடல் பிழையென்றே—வுன்னிப்
பொதுநலவு ழைப்பைப் புரிந்திடவே வெண்ணிப்
புதுவைநகர் வந்தார் புகழ். (6)

## பொதுநலசங்க உழைப்புப்பூண்டல்.

### விருத்தம்.

வதுவைசேர் பெரியோ ரியாரும் மகிழ்ந்துதா மொன்று கூடி
புதுவைமா நகரின்மிக்க பொதுநல சங்க மொன்றிங்
கிதமுட னேற்ப டுத்தி யிருந்தன ரிதற்குத் தலைமைப்
பதவியை யார்க் களிப்ப தென்று தாம்பரிந்து நாடி. (7)
கூட்டமதைக் கூட்டியிதைக் கூறிடவுமி யாவர்களுந்
தாட்டிகராந் தருமராஜை தலைவராய்நன் கமைக்கக்கைச்
சீட்டெழுதி தாங்கொடுக்கத் திகழ்தரும ராஜேந்திரர்
நாட்டமதாய் தேர்ந்தெடுத்தார் நன்மைபுரி வாரென்றே (8)
சேர்ந்தவுடன் சங்கத்தைச் சீர்பெறவே தானடத்த
கூர்ந்தமதி யுற்றுமிக குதூஹலமாய்ச் சட்டமதை
சேர்ந்தெழுதி யேவனுப்ப திகழ்புதுவை கவர்னர்மிக
பார்த்திவரை யேவழைக்கப் பரிவாகச் சென்றனரே (9)
கவர்னர்தான் மகிழ்ந்துமிக்க கண்யதர்ம ராஜைநோக்கி
யிவண்சங்க மேற்படுத்தி யிருக்குசட்ட மதுணர்ந்தேன்
கவர்ன்மென்டின் சார்பதாகக் கலந்தினி திருக்கவேண்டும்
எவருமொற் றுழைப்பீராகி லினிநல மடைவீரென்றார் (10)

அப்படியே தாமிருக்கவவர்கேட்ட கேள்விக்குத்
தப்பிலா தேற்றவிடை தானளிக்க கவர்னர்மிக
வொப்பியே வுத்தரவு வுவந்துதரச் சங்கமதை
மெய்ப்படிந டத்திவந்தார் மேலான குணத்தோரே. (11)

**விவசாய சங்கத்தலைமை வகித்தல்.**

**எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.**

பொன்னார்ந்த புதுவையைச் சேர்ந்ததிரு வொழுகரைப்
புகழ்கனக னேரிபக்கம்
மன்னார்ந்த விவசாய சங்கமேற் படுத்திசுக
மகிழ்வாய் நடத்திமிக்க
முன்னார்ந்த மிராசுதார் வர்த்தகரு மாதியோர்
முயன்றுவாக் களித்தபின்னர்
பன்னார்ந்த தருமரா ஜேற்றுதலை மையையுற்று
பரிந்தே நடத்திவந்தார். (12)

**விருத்தம்.**

இப்படியா யிருக்கும்போ தெழிலுறும் புதுவைதன்னிற்
செப்பருங் கவர்ன்மெண்டார் திகழ்விவ சாயப்பொருள்
தப்பிலாக் காட்சிவைக்கத் தானவல் கொண்டுமிக்க
வொப்பியே யாவருக்கு முணர்த்தினர் முடியவில்லை. (13)

பன்னரும் புதுவைசார்ந்த பலவூர்க டன்னிலுள்ள
தன்னிகரில் விவசாய சங்கத்துத் தலைவர்தம்மை
யன்புட னழைத்துகவர்ன ரவரவ ராலோசனை
யென்னவென் றேவியம்ப வெண்ணமுற் றிருந்தாரன்றே (14)

தலம்புகழ் சங்கமுற்ற தருமரா ஜேந்திரர்தான்
நிலையுறுங் கவர்னருக்கு நேயமாய் நிகழ்த்தலுற்றார்
மலையிலை யணுவதாக மகிழ்ந்திதை முடிக்கலாகும்
நலமுள வென்றன்வார்த்தை நம்பியே கேண்மினென்றார் (15)

பயிர்த்தொழில் செய்வோரெல்லாம் படித்தவரல்லர்மிக்க
வுயிர்த்தொழி லென்றுதானு முயர்ந்ததைக் காட்டமாட்டார்
நயமுட னவர்கள்வாழும் நவிலரு மிடம்நாம்சென்று
ஜெயமுறக்கேட்டுக்கொண்டால்சீக்கிரம்முடியுமென்றார் (16)

இதைக்கேட்ட கவர்னர்தானு மிசைப்பது சரியாமென்றே
யதற்கவ ரொப்புக்கொண்டே யன்போடுத் தரவுதந்தா
ரிதமுடன் கிருஷிசெய்வோ ரிருப்பிட மெல்லாஞ்செல்ல
வதிபராய்த் தருமராஜை யமைத்தன ரறிந்துநன்றே (17)

நல்லதரும ராஜேந்திரர் நண்ணிபயிர் செய்வோருக்குச்
சொல்லப் பொருட் காக்ஷியின்சீர் சுருக்கினி லேயுணர்ந்தே
வல்லகாய் கனிகிழங்கு வகைமலர் செடிகொடிகள்
பல்விதமெ லாமெடுத்துப் பலர்களும் வந்துசேர்ந்தார் (18)

## தங்கமெடல் பரிசுபெறுதல்.
## கட்டளைக்கலிப்பா

இப்ப டிப்புது வைநக ரந்தனி
லிலகு விவசா யப்பொருட் காக்ஷியைச்
செப்பரும் பொருட் காக்ஷித் தலைவர்கள்
சேர்ந்து தான்சிறப் பாகந டந்ததை
வொப்பில் பாரீஸ் விவசாய மந்திரிக்
குத்தமப் புது வையின் கவர்னரும்
மெய்ப்ப டியிவர்க ளைக்கு றித்துமே
வேண்டியே நிருபத்தை யனுப்பினர் (19)

கண்டசீர் விவ சாயமந் திரியார்
களித்துத் தக்க வெகு மதியாகவே
கொண்டு ஷேவாலியே துய்மெரிட் அக்ரி
கோ லெனுந் தங்க முற்ற மெடலதை
யண்டுசீர் தரும ராஜு கொண்டப்ப
யவர்க் கனுப்ப மகிழ்ந்தனர் யாவரும்
பண்டு செய்த புண்ணியத் தவமென
பரிந்து வாழ்த்தியே போற்றினர் தானரோ (20)

## ஒபிசியே தெலோர்தர் யூனிவர்சல் துய்மெரித்யூமேன் பட்டமடைந்த விபரம்.

### எழுசீர் விருத்தம்.

இசைந்தசீர்ப் புதுவையிற் பொதுசங்க வுழைப்பையே
யேற்றே நடத்திவந்தே
நசையுற்ற தருமரா ஜுக் கொண்டப் பாவெனுமுயர்
நண்பருக் கேமகிழ்ந்தே
சொசியதெ தேநவுஷியோ னெனும்பெயர் தனைக்கொண்டு
துலங்குமெ னேவ் நகருளோர்
திசைபுகழ் பதக்கமும் நற்சாக்ஷிப் பத்திரமும்
சேர்த்தனுப் பினர்களபாரே (21)

### நேரிசை வெண்பா

ஆயிரத்துத் தொள்ளா யிரத்துமுப்ப தாமாண்டு
நேயடிசம் பர்முப்பா நேர்தெய்தி—ஆயமெனேவ்
சான்சே லறியென்னும் சங்கத் ததிகாரர்
தான்வரைந்த வுட்பொருளி தாம். (22)

### ஆசிரிய விருத்தம்.

பேருற்ற பிராஞ்சிந்தி யாவிலு மிக்கசீர்
பிராஞ்சுகொஷேன் சைனுவிலும்
பிறங்குபல வருடங்களாய்
சீருற்ற விவசாய விஷயங்கட் காகவும்
பொதுநலங் கட்காகவுந்
திகழும்பொது சங்கங்களில்
நேருற் றிடவவையி லீடுபட்டு மேலான
பொதுவுழைப் பையேயதிகமாய்
நினைந்துமிக விமரிசையுடன்
பாருற்ற பிராஞ்சிந்தி யாபிரஜை களுமொற்று
பகர்சகோ தரவாஞ்சையைப்
பற்றிடக் கங்கணங் கட்டினர் (23)

### வெண்பா.

பெருந்தன்மை புத்தியுமே பெற்றுழைத்து வந்திங்
கிருந்தகார ணங்களுக்கா யின்பம் — பொருந்துசீர்
நன்றிபா ராட்டியே நற்சாட்சி பத்ரமெட
லின்றனுப்பி னேமுமக் கே யாம் (24)

### விருத்தம்.

தபமிகு ஜவியேதர் மா தெகொண்ட ப்பாவுக்கு
சுபமாக மனுப்பினர்கள் சொற்றிடுவே னியாதெனிலோ
ஒபிசியேதெ லோர்தர்யூனி வெர்சல்தூய் மெ ரித்யூமேன்
அபிதான பட்டமதை யகமகிழ்ந்து வளித்தனரே. (25)

### பல க்ஷேத்திர யாத்திரைப் பண்ணுதல்.
### அகவற்பா

கீழிந்தியா வெனுங் கீர்த்திமிக வேவாய்ந்து
வாழிந் தியர்கடான் மகிழ்புண்ய க்ஷேத்திரமாம்
விஞ்சையுறு சாலைகளும் மேவிபுக ழோங்குநற்
றஞ்சை நகர்திருச்சி தருமதுரை தென்காசி
யனந்தவள மேவிசுக மமர்ந்தகுற் றாலந்திரு
வனந்தபுரங் கன்னியா குமரிவரை வாஞ்சையாய்
தேசயாத் திரைதனைச் சீராக வேசெய்து
நேசமாய் புதுவைக்கு வந்துநிலைத் தாரே. (26)

### கோட்டைப்பாளையம் அர்ச். மரியமதலே அம்மாள் கோயில் தருமத்திற்காக யவ்வூரார் வருதல்.
### நாட்குறிப்பு.
### நேரிசை வெண்பா.

ஆயிரத்துத் தொள்ளா யிரத்திருபத் தெட்டாகுந்
தூயவாண்டு செப்டம்பர் சொற்புதுவை — நேயசீர்
கோட்டைபாளை யத்துளோர் கோயில்தரு மத்திற்காய்
நாட்டமுடன் வந்தார் நயந்து. (27)

### கலிவிருத்தம்

கண்டனர் களித் தேகோயி லின்குறை
விண்டன ரலங் காரஞ்செய வேண்டிக்
கொண்டனர் கோட்டைப் பாளைய மேவர
கொண்டப் பாவினைக் கேட்டுக்கொண்டாரரோ. (28)

சிலபொரு டனை சேர்த்துமே கட்டினேம்
குலம்புகழ் மரிய மதலேக் கோயில்
பலிபீட முதற் பலவலங் காரமே
யிலையென் றம்மிட மேற்றிட வந்தனம். (29)

அன்ப ரேயந்தக் கோட்டைப்பா ளையத்தை
யென்றுங் கண்டிலே னேதும றிகிலேன்
நன்று வந்தங்கு நான தைப் பார்த்திட்டப்
பின்னர் செய்குறேன் பேருத வியென்றார். (30)

அம்மொழி தனைக் கேட்ட வறிவுளோர்
செம்மை யென்று தெளிந்து வகன்றனர்
தம்மன மகிழ்ந் தேதரும ராஜர்
நம்பி கோட்டைப்பாளை யத்தை நண்ணினர். (31)

அங்கு சென்றவ்வா லயத்தைக் கண்டிட
பொங்கி யேமனம் பூரித்து நின்றனர்
சிங்கார பீடமுஞ் செய வேண்டுமென்
றிங்கித முடன் சொல்ல விசைந்தனர். (32)

அதற்குத் தானள வற்ற பொருடனை
யிதம கிழ்ந்து சிலவழித் தேமிக
புதுமை யான பொன்னுப ரணமுதல்
வதுவை சேர்கொண் டப்பாசெய்து வைத்தனர். (33)

கோட்டைப்பாளையங் கூடு முறவினர்
தாட்டி கமுறு சற்குண கொண்டப்பா
பாட்டனு ரிரத்ன வியாபார மேசெயும்
பாட்டியார் முத்தம் மாள்வீட்டைப் பாரென்றார். (34)

சத்வ முத்தம்மாள் சோதரி சரவம்மா
ளுத்தம மருக ரோங்கு மணியஞ்செய்
முத்து நாயுடு மனைவிய முர்தம்மாள்
வித்தக முறு வீட்டையே காட்டினர். (35)

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அன்புடன் மரியமத லேன் கோட்டை பாளைய
மதிற் றிருக் கோயிலுற்ற
இன்பவர லாறுகௌரி குலாதிப கம்பால்
நாயுடுவின் வரலாற்றையும்
நன்று யியற்றியதை காட்டி பொன் னுச்சாமி
நண்பரெனு மெட்மாஸ்டரா
மன்னதையச் சிடவுமோர் சீட்டுகவி பாடிட
யாவர்களு வேண்டினரே. (36)

### கலிவிருத்தம்.

நற்குல வர லாறு நம்மவர் கண்
முற்ற றிய முழுமன தாகவே
சொற்றன ரச்சி டவே துணிந்ததற்
குற்றதைக் கொடுத்தச்சிட்டுதவினர். (37)

## கோட்டைப்பாளையம் அர்ச். மரியமதலே அம்மாள் கோயிலில் திருச்சிலுவை நாட்டுதல்

### ஆசிரியவிருத்தம்.

ஆங்கிலமா யிரத்துத்தொ ளாயிரத் திருபத்தெட்
டாண்டு டிசம்பர்மதியி
லார்ந்தபதி ஞற்றெய்தி கோட்டைப்பா ளையமதி
லமர்ந்ததிரு மரியமதலேன்
ஓங்கிடுங் கோயிலைக் கட்டியே முடித்துதா
னுயர்சிலுவை தனைநாட்டிட
வுத்தமர்க ளைத்தேடி டுந்தருணம் புதுவையி
லுற்றசீ மான்ஜவியேதே
பாங்குடைய கொண்டப்ப செட்டியார் நண்பருடன்
பரிந்தங்கு தான்வருகவே
பார்த்தனர் குருப்பிர சாதியா கியபுளோன்
பரமர்சிலு வைத்தன்னையே
நீங்குனது கரத்தா லெடுத்துவைப் பீரென்
றியம்பிட தருமராஜ
ரிசைந்தனர் சிலுவையிற் றன்பே ரிருக்கவே
யெடுத்துநாட் டினர்மகிழ்ந்தே. (38)

### கலிவிருத்தம்.

அன்ன கரினிற் சந்ததி யாரவர்
மன்னி யேவசிக் கின்று ரெனமகிழ்
தன்னைக் கொண்டு தனது நகரமாம்
பொன்னி லங்கு புதுவைக்கு வந்தனர். (39)

அந்தமு மறிவு மடக்க முஞ்சீ
ரிந்து நேர்வ தனத்தோ டிலங்கிய
பைந்தொ டியாமா ரோக்ய மரியெனுஞ்
சுந்தரி பைம ணஞ்செயச் சொற்றனர். (40)

மணமு டித்துகொ ளென்று தன் மாதுலர்
குணமுடன் பெரி யோர்களுங் கூறிட
கணமு மேயவர் கள்சொற் கடந்திடா
வெணமு றந்தரு ம ரா ஜி சைந்தனர். (41)

---

## கோட்டைப்பாளையம் அர்ச். மரியமதலை அம்மாள் திருவிழாவிற்குவர திருமுகம்வருதல்.

நொண்டிச்சிந்து.

இ-ம்-நாதநாமக்கிரியை. தா-ம் ஆதி.

கோட்டைப் பாளையமுண்டான—வரலாற்றைக்
கூறிடு வேனிந்தப்—பாரதனில்
நாட்டினில் முந்நூறு—வருடமுன்
நலமிகு மதுரையாந்—தலமதனில்
கம்பாலய நாயுடாம்—புனிதர்
கருதரும் குடும்பத்தோ—டிருந்துவந்தார்
செம்மையி லரசனுக்காய்—பயந்து
திகைத்து மதுரைவிட்டு—சுகமுறவே
திருச்சினப்பள்ளிதுறையூர்—மார்க்கமாய்
திரிந்துவந்துப்பிலிய—புறமென்னும்
மருவு மாற்றங்கரையிலே—குடியேறி
மகிழ்ந்து கோட்டைமேடென்று—புகழ்ந்துவரும்
குக்கிராமத்தைக் கண்டார்—அங்கு
குடும்பத்துடனிருந்தா—ரிடுக்கணுற
யக்கணமேழை பிச்சைக் காரி—யொருத்தி
யவ்வழியேவந்து—செவ்வையதாய்

துன்பந்தவிர்த்து போதனை—அவள்செய
தூயசவேரியாரால்—தீக்ஷைபெற்றே
இன்பமாயவர்வாழும்—நாளில்நடு
இரவினில்வந்து—தரிசனந்தந்தே
நீருமது குடும்பத்தோ—டிதற்கு
நிகழுமேற்கினில்குடி—புகவேண்டும்
பாரிற் கோயிலையேகட்ட—இடத்தையும்
பாரெனக் காட்ட—நேரேயறிந்தார்
சிறுகோயிலையேகட்டி—கம்பாலய்யா
தெரிசித்து வந்தார்—பரிவுடன்பின்
நறுமரி மதலேனம்மாள்—கோட்டைப்பாளைய
நற் பெயரைக் கொண்ட—இப்பதியில்
ஆயிரதுத்தொள்ளாயிரத்து—இருபத்தொன்ப
தாண்டுஜூலையிருபத்—திரண்டாந்தெய்தி
நேயவுற் சவங்காண—வருவீரென
நினைத்து பத்திரிகை—அனுப்பிடவே
வந்தகடிதம் பார்த்தார்—கொண்டப்பா
மகிழ்ந்துகோட்டைப்பாளையம்—புகவெண்ணியே
சிந்தைநினைந்து மாதுலர்—தமக்கு
தெரிவித்திடவும் வந்தார்—துரிதமுடன்
அப்பால் நடந்ததறிவீர். (42)

## கலிவிருத்தம்.

தன்மா துவர்சற் ஜனதன்னியசீர்
பொன் னனைய குணபுண் ணியர்மிக
யன்பரா யுற்ற ஞானய செட்டியார்
முன்னர் யோசனை செய்துமுன் னேவர. (43)

சத்ய ராஜூசின்ன சாமி யுறவின
ருத்தம சோதரி ராஜம் மாளுடன்
வித்தகக் கோட்டைப்பாளையம் விரைவதாய்
சித்தமே மகிழுற்றிடச் சென்றனர். (44)

உற்ச வங்கண் டுவந்து பின்னர்மிக
யச்ச மின்றியா ரோக்ய மரியினை
யிச்சை யுற்று தருமரா ஜர்க்கென
நிச்சய தாம்பூல நேராய் மாற்றினர். (45)

## திருமணம்.

### விருத்தம்.

வதுவையைப் புரியவேண்டி மாதுலர் தமக்கையோடு
புதுவையம் பதிக்குவந்து புகழுறும் சுக்கிலவாண்டு
விதுவையா வணியாந்திங்கள் வியன்சுக்ர வாரநாளே
யிதுவென வேற்படுத்தி யெவர்க்குஞ்சீட் டனுப்பினரே. (46)

மாமண விதிப்படிக்கே மணத்துள சடங்குமாற்றி
தூமண மகிழ்ச்சியாகத் துலங்குகொண் டப்பாமிக்க
தேமரு குழலாரோக்கிய மரிதிரும ணத்தைக்காண
காமரு நண்பரோடு கதிரவ னுதித்திட்டானே. (47)

இயம்பல மிகவுமெங்கு மெழிற்றிரை யெனமுழங்க
நயந்துபல் லாண்டுமாதர் நல்லிசை பாடல்சாற்ற
உயர்ந்தசீ மான்களாதி யுவந்துபூ மாரிபெய்ய
வியந்தனர் மணக்கோலச்சீர் விளம்பிடற் கரியதாமால். (48)

கண்களாற்கொண்டப்பாவின் கல்யாணங் கண்டோமென்றார்
பெண்களி னுயர்ந்தகற்பு பேரழகு பெண்ணேயென்றார்
பண்புட னாசீர்வாதம் பண்ணினே மகிழ்ந்துவென்பா
ரொண்புது வையினுளோரு முவப்பினையடைந்திட்டாரே (49)

பொதுநல சங்கத்தார்கள் புண்யகொண் டப்பாமிக்க
பொதுநல வுழைப்புப்பூண்டு புதுவையி லமர்ந்திரண்டாம்
வதுவையைப் புரியுங்காக்ஷி வகையினை யறிக்கைத்தீட்டி
சதுருடன் படித்தாரன்பாய் தனவந்தர் தன்யர்தாமே. (50)

### மாதுலர் பொன்மணச்சிறப்பு செய்யப் பிரயத்தனப்படல்.

### கட்டளைக்கலிப்பா.

தன்னருமை மாதுலராம் பெங்களூர்
தங்குசீர் திரு ஞானய்யசெட்டியார்
பொன்னனையகுண ஜெகராஜம்மாள்
புண்ணியவதி யைம்பதா மாண்டுதான்
நன்றியுற்ற சுமங்கலியாகவே
நாட்டிலோங்கிடு நாளினைப் போற்றவே
பொன்மணச் சிறப்பாகப் புரிந்திட
பூண்டனரன்பு புதுவையுறைந்துமே. (51)

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து முப்பா
ஞண்டுமே மதியாம்பதின் மூன்றெனும்
நேயதேதி நாளாகக் குறித்துமே
நிகழ்த்திடத் தான்வர முடியாததால்
தூயசீர் மதுரகவிப் பாமாலைச்
சூட்டவேயருள் செய்த நரன்றியன்
பாயவோர் கடிதத்தைப் பெங்களூருக்
கனுப்பினர் தன்மாதுல றறியவே. (52)

---

கடிதத்தினுட் கருத்து.

ஆசிரியவிருத்தம்.

திருவாள ரன்பார்ந்த மாதுலர்த மக்குயான்
செய்துகொள் விஞ்ஞாபனம்
செப்பரிய தங்கள்பொன் மணச்சிறப் பைக்காண
சிந்தைமகிழ் கொண்டிருந்தேன்
வருவதற் கேமுடிய வில்லையத னலிந்த
வாழ்த்துபத் திரமுமக்கே
மகிழ்வா யனுப்பினே னின்றுநடை பெறுசம்ப
வத்தினைப் போற்பின்னரும்
மருவாறும் அறுவதில் வைரவஜூ பிலிதனை
மாநிலந டத்தபரமன்
மன்னுநம் மணவரையும் ரக்ஷிக்க வேண்டுமென
வரைந்தனர் கடிதத்தினை.
யுருவாறு நற்றமிழிற் கவிராயர் முதலோர்க
ளுவந்துபொன் மணப்பா சொல
வுத்தமரின் ஜூபிலி நடத்ததிருப் பரமனு
ருயரருள் புரிந்துகாக்க. (53)

## அர்ச். பாப்பரசரின் ஸ்ஞானதிபதி 1932=ஸு டிசம்பர்=மீ 12=உ புதுவைக்கு வருதல்.

### விருத்தம்.

உலகெலாம் புகழுரோ மாப்புரிப் பாப்பரச
ரோங்குஸ்ஞா னதிபதியா
முத்தம கியற்கெல்ஸ் மாமுனிவர் புதுவைக்
குவந்துவரு தலையுணர்ந்தே
யிலகுமந் நகரினுள குருப்பிரசா தியர்பல
ரிசைந்தசீ மான்கண்முதலோ
ரேற்றவொரு கூட்டமதை கூட்டியே யவருக்
கியன்றமரி யாதைபுரிய
நலகுண மிகுந்த கவர்னர் மூவா னேயவர்
நாடியே வந்திருக்க
நவிலரிய யாவருக் குற்றபணி யேசெய்து
நண்ணியே புடைசூழ்ந்திடத்
தலம்புகழு கொண்டப்ப தருமரா ஜேந்திரர்
தகுபிராஞ் சுப்பாஷையிற்
தக்கவொரு பத்திரிகை யக்கணம் படித்திட்ட
தன்மையினை யென்னென்பனே. (54)

## இரண்டாம் மனைவி ஆரோக்கியமரியம்மாளுக்கு புத்திரர் புத்திரிபிறத்தலும்-இறத்தலும் தெரிவித்தல்.

### கட்டளைக்கலிப்பா.

ஆயிரத்துத் தொள்ளாயிர முப்பதா
மாண்டினில் டிசம்பர்மதி யைந்தினிற்
றாயதேவ ராஜென்று முதற்சுதன்
தோன்றின னன்கு மாதமிருந்துதான்
மாயமாய்ப்புது வையில் மரித்தனன்
வருந்தினர் கொண்டப் பாவெனுந்தந்தையும்
நேய வன்னை வாரோக்கிய மரியுள
நினைந்தி ரங்கிமெ லிந்தனள் தானுமே. (55)

முன்னமாயி ரத்துத் தொள்ளாயிரத்து
முப்பத்து மூன்றுமாண்டு ஜூன்மாதமே
யுன்னரு முதற்றெய்தி யிரண்டாவ
துதித்த புத்திரி ரீதாவதிமிக
பன்னுமவ்வாண்டு வக்டோபர் பதினெண்
பார்விடுத்து மரித்தது பார்த்துமே
வன்னை தந்தை நினைந்து தளர்ந்தன
ரத்தனுர் சித்தமீதென வெண்ணியே (56)

முகிரமாயிரத்துத் தொள்ளாயிரத்து
முப்பத்தா ராமாண்டு செப்டம்பர்மதி
தகுமிருபத்து மூன்றுந் திகதியிற்
சாற்றரிய மூன்றுவது புத்திரன்
மிகவழகுள சூசைராஜ் தோன்றியே
மேன்மையாகவாறு திங்க ளோங்கியே
சகம்விடுத்து பரமனைச் சார்ந்தனன்
தந்தைதாயார் மற்றுளோர் வருந்தவே. (57)

**தந்தை. இரங்கற்பா.**

**அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.**

இன்னமொரு மணம்வேண்டா மென்றிருந்தேன் தக்கபடி
விசைந்த சீல
பொன்னனைய குணவதியா மாரோக்கிய மரிதனையே
பொருந்த மன்றல்
தன்னைபுரிந் திடவைத்தாய் தயாபரனே மூன்றுபிள்ளை
தமைக்கொ டுத்தாய்
அன்னையுநான் வருந்திடவே யவர்களையுன் பதஞ்சேர்த்த
தறிகிலே மால். (58)

## தாயாரிரங்குதல்.
## அறுசீர் விருத்தம்.

தக்கமணு ளனைக்கொடுத்தாய் தனபூஷ ணுதிமனை
சார்ந்த சுற்ற
மிக்கவளித் தாய்சுகிர் தந் தருமூன்று மக்களையே
வேண்டித் தந்தாய்
பக்கமுற்ற திரித்துவமென்றேகாட்டி யுன்றன்திருப்
பதத்திற் சேர்த்தாய்
துக்கமுற்று வழுதுமதி சோர்ந்துதான் வாடுகிறேன்
தூய தேவே. (59)

## கொச்சகப்பா

அப்பா தேவ ராஜே வழகுசி காமணியே
வெப்பார் புகழவேநீ யிருப்பாயென் றெண்ணிமிக
தப்பில்ம கிழ்ச்சியினை தான்கொண் டிருந்தவெனை
முப்போது மேவருந்த முடிகிச்சென் றாயேநீயே. (60)
கனியே கனிரசமே கண்ணேரீ தாவதியே
தனியேவெ ணுருயிரே சார்ந்தப சுங்கிளியே
இனியுனை யென்றுகாண்பே னென்றுளம் வாடுகிறேன்
இனிதாய்பர மனிட மெங்கட்காய் வேண்டுவையே(61)
நேச முட னின்று தான் நெடுநாளிருப் பையென
வாசை சூசைராஜே யவர்பெய ருனக்கிட்டோம்
பாசம தாய்வளர்த்தோம் பக்ஷம தைமறந்தே
வாசபரம னுனை வாவெனச் சென்றனையோ! (62)

## இரங்கல் பாடல்

பாலா என்ன காலம் - என்ற வர்னமெட்டு.

இ-ம். செஞ்சுருட்டி த-ம். - ரூ ம்.

### பல்லவி.

ஐயோ என்னசெய்வேன் தேவராஜு பாலா-குண-சீலா
ஆவி துடித்துமே-கூவி யழுகிறேன்
தாவி வருவையே-பாவி யென்முன்னே — ஐயோ
சந்திரனில்லா வானம்போலா னேனே-இங்கு-நானே
தாங்கொணுத் துயர-மோங்கினி னைந்துமே
பூங்கொடி போல்துவண்-டேங்கி யேவாடுறேன் — ஐயோ
எனக்குஜேஷ்ட புத்திரநீ யென் றிருந்தேன்-மிக-மகிழ்ந்தேன்
எண்ணுது மெண்ணியே-குண்ணி வருந்திட
பண்ணினை யேபிது-கண்ணிய மோடா — ஐயோ (63)

காசிநாதா இதுவுன்னருளோ, என்ற மெட்டு.

இ-ம். மத்தியமாவதி, தா-ம். ஆதி.

**பல்லவி.**

அருமை ரீதா வதியே நீயே - அழச் செய்தாயே.

**அநுபல்லவி**

பெருமை யாகவுனைப் பெற்றுவ ளர்த்தேன்
இருப்பாய்ப் புவியினி லென்று களித்தேன். (அரு)

தாயின் பெயரைச் சொல்வா யென்றே-நினைத்தே-னன்றே
தங்கக் கிளிபோ - லிங்குபிறந்தாய் -
அங்கத்தை விட்டு - யெங்கு பறந்தாய். (அரு)

சதகுணம் புத்திரி யென விருந்தேன் - மிக - மகிழ்ந்தேன்
தந்தை தாயாரும் சிந்தமெ லிந்திட -
சொந்த பரனைய - டைந்தனை யேதிட. (அரு)
(64)

அப்பா மாண்டாயா, என்ற மெட்டு.

இ-ம். கமாசு தா-ம். ஆதி

**பல்லவி**

அப்பா சூசை ராஜே, எப்போ காண் பேண்டா
ஆருயிர்க் குயிரா யிருந்தா யடா. — (அப்)

அங்கம்ப தருதே அனலாய்ப் பெருகுதே
எங்குசென் றூலுமுன் எண்ணம் வருகுதே — (அப்)

நீயேவொரு பெரு நிதி யென்றி ருந்தேன்
மாயவாழ்வு செல்வ மின்னலென் றறிந்தேன். — (அப்)

கும்பி பிசைந்தழ கொதிக்கச் செய்தாயே
நம்பியிருந் தேனை நட்டாற்றில் விட்டாயே. — (அப்)
(65)

**பரமனைவேண்டிப் பிரார்த்தித்தல்**

தேவாரம். பொன்னார் மேனியனே என்ற சந்தம்.

**பாடல்.**

இ-ம் மோஹனம் தா-ம். ரூ ம்.

இங்கெமக்காருயிரா யினிதுதித்து மூவருமே
தங்கி சின்னாளிருந்தே மிகதந்தை தாயைவிடுத்தே
துங்கபரனருளையே துணையென்றே நீர்சென்றடைந்தீ
ரெங்கள் துயராற்றபரனை யிறைஞ்சியே வேண்டுவீரே(66)

தன் தாய் மரித்ததைப்பற்றி,
சௌ. ஆரோக்கியமரியம்மாள் வருந்துதல்.

விருத்தம்.

இப்படியாய் குழந்தைகடான் மரித்திடவே யேங்கிமன
மிருக்கு நாளிற்
செப்பரிய தாயாராம் அமுர்தம்மா ளுயிர்நீத்தச்
செய்தி யோர்ந்தே
இப்படியி லிடிமேலே யிடிவிழுந்தாற் போலமிக
விதயங் குண்ணி
யொப்பிலாத் துயருற்று வருந்தியதை யெப்படிதா
ஞைத லாமோ? (67)

மூதற்குமாரன் அருமைராஜுக்கு மணம்புரிந்து
வைத்தல்.

ஆசிரியவிருத்தம்.

பூமேவு கொண்டப்ப புகழாதி புத்ரனும்
புனிதன்கல் வித்தேர்ந்தசீர்
பொறுமையுறு அருமை ராஜுத்திரு தனராஜு
பூவையா மமுர்தம்மையின்
தேமேவுந் தவபுத்ரி இருதயபூ ஷணமெனும்
செல்விதனை யேமகிழ்ந்துத்
திருமணம் புரிந்தன ராயிரத்துத்தொள்ளாயிரத்துத்
திகழுமுப் பத்துமூன்றும்
மாமேவு வருடம்பிப் ரவரியெட் டாந்திகதி
வளர்புதன் நாட்புதுவையின்
மங்களசு பங்கள்தரு மில்லறம தோங்கியே
மன்னுபதி ஞறுற்றிடத்
தூமேவு புதுவைநகர் கவர்னர்முத லோர்களும்
சூழ்ந்துவந் தேயிருந்தே
சுகவாசி புரியகல் யாணமதை செய்தசீர்
சொற்றிடற்க் கரியதாமால். (68)

### பௌத்திரி தனபூஷணம் பிறத்தலும் நாமகரணம் சூட்டலும்.

#### எழுசீர் விருத்தம்.

சீராரு மாயிரத்துத் தொள்ளாயிரத்து முப்பான்
சேர்ந்தமூன் றாமாண்டினிற்
பேராரி சம்பர்மதி விருநான்காந் தெய்தியிற்
பிறங்குதிரு அருமைராஜுக்
கேராருந் தனபூ ஷணமெனு ம்புத்ரிதா
னினிதுதித் திடமகிழ்ந்தே
தாராருங் கொண்டப்ப திருநாம கரணஞ்சீர்
சடங்கினைப் புரிந்திட்டாரால். (69)

### புத்திரன் அருமைராஜை சைகோனுக்கனுப்புதல்.

#### எண்சீர் விருத்தம்.

தன்னருமைராஜுகல்வி தன்னிற்றேர்ந் திடவே
தகுசீர்மைக் காயிரத்துத்தொள்ளாயிரத்து முப்பைந்
தென்னு மாண் டினிலேகி பாரிஸ்டர் பரிசைஷயிற்
றினிதுதே றியேபுதுவை நகர்வந்த மர்ந்திட
பன்னுசை கோனுக்குத்தி யோகம தைப்புரியவே
பாங்குடைய மணைவியும் பௌத்திரியுடனன்றாமே
வன்னகராம் சென்றமர்ந் திருக்கவே செய்தன
ரன்புடைய தந்தையார் முயற்சிதா னென்னே. (70)

### இரண்டாவது புதல்வன் அதிர்ஷ்டராஜை சோலோன்பதிக்கு அனுப்புதல்.

#### ஆசிரிய விருத்தம்.

முன்னுயி ரத்துத்தொள் ளாயிரத்து முப்பதா
மூன்றாண் டிரண்டாவது
முகமனுரை புத்திர னதிர்ஷ்டராஜுச் சீமையில்
முயன்றுகல் வியைக்கற்றிட
யங்நாடு சென்றுநன் றாயிருந் தேகல்வி
யழகுறக் கற்றுபுதுவை
யம்பதியில் வந்தமர்ந் திடவுமோ ருத்தியோக
மகப்படா திருக்கத்தந்தை

மன்னூர்ந்த சோலோன்பதியி னதிகார மெலாம்பார்த்து
வந்தவே ஜெண்டுதானும்
மரிக்கவே யவைகளைப் பாதுகாத் திடவேண்டி
மகிழ்ந்தேயதிர்ஷ்டராஜு
தன்னையே வனுப்பவே வுன்னினர் சொற்படி
தானகன் றேயங்குதான்
சரியாக வேபார்த்து வருகிறார் பரிவுடன்
தக்கோ னதிர்ஷ்டராஜே. (71)

**தருமராஜு செட்டியாருக்கு வாதபிணி வந்தகாலமும், சிகிச்சையும், பாதுகாத்தலும்.**

**எண்சீர்க்கழிநெடிலடிலாசிரிய விருத்தம்.**

இப்படியா யிருக்கவா யிரத்துத் தொள்ளா
யிரத்துமுப்பத் தேநான்கா மாண்டுதன்னிற்
செப்பருமேப் ரல்மதிபன் னிரண்டாந் தெய்தித்
திகழ்புதுவை யிருந்தேகொண் டப்பாவுக்
கெப்படியோ திடீலென்று வாதநோய்தா
னெய்திடவே சிகிச்சைமுதலி யாவுஞ்செய்தே
வொப்பிலிரண் டாம்மனைவி யாரோக்கிய மரியம்மா
ளுளம்வருந்தி மெலிந்தவித முரைக்கொணுதே (72)

**மனைவி இரங்கல்.**

**கட்டளைக் கலிப்பா.**

தன்மணாளர் தருமராஜுயவர்
தாங்கொணுப் பிணிதானே வந்துற்றிட
வென்செய்குவே னென்றெண்ணி மணாளியா
மிலகுமா ரோக்கியமரி தானுமே
யன்னையைப்போலரு கிருந்தேயவர்க்
கானவூழியஞ் செய்துமே வந்தனர்
பொன்னனைய குணவழகியைப்போல்
பூதலத்தினிற் காணலரிதரோ (73)

### பெங்களூருக்கு வருதல்.

### விருத்தம்.

எத்தனையோ டாக்டர்களும் மற்று முள்ள
யிந்துவைத் தியர்முதலோர் பார்த்து மிக்க
சித்தமெலிந் துற்றுமருந் தளிக்கச் சற்று
சீராக வேயிருக்க நலத்தை வேண்டி
வுத்தமசீர் பெங்களூர் தன்னில்மா துலரா
மோங்குஞா னய்யசெட்டி யாரில்ல மதற்கே
வித்தகக்கொண் டப்பாதன் மனைவி யோடு
விருப்பமதாய் வந்திருந்தார் சுகிக்கத் தானே. (74)

### நேரிசைவெண்பா.

நோய்க்கு மிகவருந்தி நொந்தம ணாளருக்குத்
தாய்க்குப்பின் தாரமெனத் தானறிந்து — வாய்க்குநல
அன்பினையே காட்டி வரும்பணியே வாற்றியே
தன்கடனைச் செய்துவரார் தான். (75)

---

### மூன்றாவது புதல்வன் செல்வராஜு மரணம்

### விருத்தம்.

ஆர்ந்தவாயி ரத்துத்தொள் ளாயிரத்து முப்பா
ஞாண்டு ஜுலைமதி வெட்டாந்தெய் தியினற்
கூர்ந்தமதி யுற்றதன் சுதன்செல் வராஜாம்
கூறுரெமோன் நல்லிருப தாம்வயது தன்னிற்
சீர்த்தியுறும் புதுவையினிற் றிடீலென்று மரிக்க
செய்தியுணர்ந் தேகொண்டப்பா மனைவி தானும்
பார்த்திடவ ருந்தியே பெங்களூர் விடுத்தே
பரதவித்து புதுவைநக ருக்குச்சென் றாரே. (76)

### எழுசீர்க்கழிநெடிலடிலாசிரிய விருத்தம்.

அன்புற்ற தந்தையார் கொண்டப்பா பெங்களூ
ரங்கிருந்து வருவதன் முன்
துன்புற்று சுதன்செல்வ ராஜிறக்க வத்தருணஞ்
சூழ்ந்துமிக வேங்கி நெஞ்சம்
என்செய்வோ மென்றுருகி ருந்தடக்கஞ் செயவேண்டு
மேற்பாடெலாமியற்றி
முன்னிருந்த பெரியதந்தை கஸ்தூரிதே கொண்டப்பா
முயற்சிதுயர் மொழிய வாமோ. (77)

### தந்தை இரங்கல்.

### வெண்பா.

விதுவைநி கர்த்தமுக மேவுசெல் வராஜே
வதுவை புரியும் வயதிற் — சதுராக
மண்ணுலக வாழ்வுதான் மாயாவி காரமென
விண்ணுலக முற்றனையோ விள் (78)

அப்பா வெனதன்பா ராருயிராங் கண்மணியே
இப்பாரி லேயானு மேங்கியழ — செப்பாது
சர்வேஸன் றுளிணையைச் சார்ந்தனை யீதுனக்கு
தர்மமோ வந்துநீ சாற்று. (79)

"முந்தித் தவங்கிடந்து முந்நூறு நாட்சுமந்து
அந்திப் பகலாகவுனை யாதரித்துச் — தொந்திச்
சரியவே பெற்றதனம் மாளாந்தாய்க் காண
பரிவாகச் சென்றனையோ பற்று. (80)

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சித்தமகிழ்ந் தேபாது காத்தவுன தந்தையாம்
செப்பரிய ராஜம்மாளு
முத்தமசீர் பெரியன்னை பாப்பாத்தி யம்மாளு
மோங்குநற் றிவ்ய குணமுஞ்
சுத்தமதி யுற்றசிற்ற ன்னையா ரோக்கியமரி
தோகைமா துளமெலிந்து
மெத்தவும் வருந்தியே நினைந்தழுத விதமதை
விளம்பிடற் கரியதாமால். (81)

### தமையன்மார் வருந்துதல்.

### இன்னிசை வெண்பா.

சீர்சைகோனுக்குத்தான் சென்றிருக்கு மண்ணன்மார்
பேர்அருமை ராஜு பிறங்கதிர்ஷ்ட ராஜுமிக
வென்றுகாண்போந் தம்பியையென் றேங்கி மிகவழுதா
ரன்றுகடி தங்கண் டயர்ந்து. (82)

### தம்பி தங்கை இரங்கல்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஒற்றுமைதான் மிகவுற்ற தம்பிஜெய ராஜுமிக
வனதேக் கத்தைப்
பற்றியேபித் தேற்றினரைப் போலவிருக் கின்றுனிப்
பாரின் மீது
கற்புளநற் சூசானுந் தங்கையுமே மிகவலறி
கலங்க நீதா
னற்பகலா யருகிருந்தே யவர்வருந்த சென்றதென்னே
அறிவு ளோனே. (83)

### செல்வராஜு மரித்ததைக்குறித்து இந்நூலாசிரியர் இயற்றிய இரங்கல்.

### நேரிசை வெண்பா.

பெங்களூர் வந்துப் பிணிநீங்கி நற்புதுவை
தங்களூர் சென்றிடவே தான்வந்தாய் — இங்குத்
திடீரெனத் தந்திவர திக்பிரமை கொண்டே
கடிதகன்றாய் கர்த்தன்செயல் காண். (84)

பண்டப்பா புத்திரரால் பல்லோர் மிகவருத்தங்
கொண்டப்பா வாடிக் குவலயத்தில் — விண்டரிய
நிர்ப்பாக் கியராக நின்றுவிட்டா ரீதொரு
துர்ப்பாக் கியமன்றோ சொல். (85)

தாயற்ற சேயெனவே சார்ந்துமிக வன்பினையே
நீயுற்றே யாதரித்தாய் நிச்சயமாய் — வாயுற்ற
புள்ளெனவே நின்றனது புந்திவருந் தச்செய்தார்
தள்ளரிய செல்வராஜு தான். (86)

பிறப்பதுவி றப்பதுவும் பேருலகில் யாரும்
மறப்பதுவு மீதொரு மாயம் — சிறப்பார்
ஸவியபதெ கொண்டப்பா சஞ்சலத்தை விட்டுக்
குவித்துகை யாண்டவனைக் கூறு. (87)

### மரித்தநாள் குறிப்பு.

ஆயிரத்துத் தொள்ளா யிரத்துமுப்பத் தாறுமாண்
டேயஜுலை தெய்தியா மெட்டுபுதன் — தாயகமாம்
நற்புதுவை செல்வராஜு நல்லோன் பரலோக
பொற்பதிவாழ் வுற்றான் புகல். (88)

### ஏகப்புதல்வி=ரூசான் அம்மாளுக்குமணம்புரிவித்தல்.

### விருத்தம்.

ஆயிரத்துத் தொள்ளா யிரத்துமுப் பத்தேழா
மாண்டுஜன வரிதிங்க ளாமிருபத் தெட்டாம்
நேயமிகுங் குருவாரந் தனதேகப் புதல்வி
நிகழ்ரூசா னமிர்தவதி தனக்குபுது வையினிற்
றாயஆர ணிஇரா யலுச்செட்டி ரத்னவதி
சுதன்செல்வ ராஜேனும் பி.ஏ.தனக்குமிக்க
வாயசீர் புதுவையினில் மணம்பு ரிந்தேநல்
லகமகிழ் வுகொண்டனர்கொண்டப் பாஅன்பரே. (89)

### கலிவெண்பா.

### 4=வதுபுதல்வன் ஜெயராஜுவின்நிலமை.

நான்கா வதுபுத்ரன் நல்விக்தோ ரென்னுபெயர்
தான்கொள் ஜெயராஜ் சற்குணனும்—வான்புவியி
லன்னை தந்தைக் கேகடைசி யன்புடைய பாலனென்றே
தன்னருகிற் செல்வமதாய் தான்வைத்திங்—குன்னரிய
இட்டமதாய்ப் பெற்றதா யிக்கிரண் டாய்மிக்க
திட்டமுடன் பார்த்துவரும் சிற்றன்னை—விட்டகலா
தெப்போ தருகில்வைத் தின்பமுட னோக்கியே
தப்பாது காத்துவரார் தான். (90)

## ஸ்ரீமான் தருமராஜு கொண்டப்பா அவர்கள் பிணிநீங்கப் பரமனைப் பிரார்த்தித்தல்.

### எழுசீர் விருத்தம்.

விண்ணவர் போற்று நாதநீ யல்லால்
விரும்பிநான் பற்றிலேன் கண்டாய்
திண்ணமா யடியார்க் கருள்புரிந் தாண்ட
தேவனே தேவர் நாயகனே
மண்ணின்மே லடியேன் வாதவன் பிணியால்
வருந்தியே யுழல்கிறே னின்றே
நண்ணியே யென்றன் கவலையைத் தவிர்த்தே
நம்பினேன் காத்தருள் வாயே. (91)

ஆதியி னாதித்த வத்தநீ யல்லால்
யாரையும் நம்பிலேன் கண்டாய்
நீதியா யன்ப ரகத்துறும் குறையை
நீக்கியே யாண்டிடும் பரனே
மேதினி தனிலே வாதநோ யதனால்
மிகவுநைந் துறுகிறே னின்றே
சோதியா தென்றன் றுயரதைப் போக்கித்
தொண்டனைக் காத்தரு ள்வாயே. (92)

ஜீவகா ருண்ய தேவநீ யல்லால்
திக்கிலை பற்றினேன் கண்டாய்
யாவரை நோவே னியார்க் கெடுத் துறைப்பே
னண்ணல்நின் தயவிலை யென்னே
நாவினா லுனது பெயர்ஜெபம் புரிந்தே
நாடொறும் வருகிறே னின்றே
மேவிய வாத பிணியதை நீக்க
வேண்டினேன் காத்த ருள்வாயே. (93)

## சீட்டுக்கவி.

### இருபத்தெண்சீர்க்கழிநெடிலடிலாசிரிய விருத்தம்.

திருமார னெனவொளிரு மார்பா வளங்குலவு
திகழ்புதுவை வாழ்ப்ரதாபா
செப்பரிய கௌரிக்கு லாதிபா நெறிவழா
ஜீவகா ருண்யபூபா
சித்திதருந் தமிழ்பிராஞ்சு கற்றதீ ராவுசித
செங்கமல முகவஜீரா
சீர்கோட்டைப் பாளைய மரியமாத லேன்கோயில்
சிலுவைநாட் டியவுதாரா ...... ¼

பெருமானை யனுதினம் போற்றுசது ராஜெயப்
பிரபலவொய்யார வீரா
பெருமையுறு திருதம்பு செட்டியார் கற்பரசி
பெத்தம்மா யின்குமாரா
பிறங்குசுக புண்யபரி பாலா தவவாய்மை
பிசகிலா சத்தியசீலா
பிரியமொடு பொதுசங்க வுழைப்புற்று தங்கமெடல்
பெற்றகண் ணியவிசாலா ...... ½

மருமாம லர்த்தார்பு னைந்தொளிர் புயாசலா
வான்றருவை நிகர்கரதலா
மதிவதன வாரோக்கிய மரியெனுங் குணவதியை
மணந்துவாழ்ந் தோங்குமேலா
மங்களசு பங்கடரு மிங்கித சுதந்திரா
வைபோக சுகநரேந்திரா
மன்னுகுடும் பச்சரித கோர்வைமணி மாலைக்கு
மகிழ்ந்துபரி சளித்தபுனிதா ...... ¾

இருமாநி லத்தில்வந் துனையடைந் தார்கடம
தின்னல்தரு நல்குரவெனு
மிருள்சிந்த வருசந்த்ர னெனவந்த கொண்டப்ப
வினியகரு ணாதயாளா
யிவ்விரண் டாம்பாக திவ்யமணி மாலைக்கிங்
கேற்றபொன் னளித்துமிகவீ
ரெண்பேறு பெற்றுசுக பரனருளி னாற்சிறந்
தெந்நாளும் நனிவாழ்கவே ...... (94)

## வாழ்த்து

### எண்சீர்க்கழிநெடிலடிலாசிரிய விருத்தம்.

கோமேவு புதுவைதிரு கொண்டப்பா வின்றன்
குடும்பசரி தக்கோர்வை மணிமாலை தன்னைத்
தேமேவு செந்தமிழால் முன்னுறைத்தே னின்னே
திகழுமிரண் டாம்பாகம் செய்தனனன் னேரின்
மாமேவு குடும்பமது மதிகதிருள் ளளவும்
மன்னுபுகழ் வாய்ந்துமிக மக்கள்விருத் தியதாய்த்
தூமேவு மனமாயு ளாரோக்கிய முற்றே
சூழ்ந்துறவி னர்களுடன் வாழ்ந்திடுக மாதோ. (95)

### வாழ்த்து விருத்தப்பா.

திருராஜன் செல்வசுகம் திகழ்ராஜன் புதுவையினிற்
சிறப்பாய் வாழ்ந்து
வருராஜன் பொதுநலத்தை வதிராஜன் ஆரோக்கிய
மரிமகி ழ்ச்சீர்
பெருராஜன் தருமராஜு பெயர்ராஜன் கவிஞருக்குப்
பிரியமுற்றுத்
தருராஜன் மணிமாலைத் தகுராஜன் பல்லாண்டு
தழைத்து வாழி. (96)

கண்யவா ரோக்கியமரி கருணைவா ரோக்யமரி
கணவர்க்கேற்ற
புண்யவா ரோக்கியமரி பொறுமையா ரோக்கியமரி
புகழ்தருமரா
ஜெண்யவா ரோக்கியமரி யின்பவா ரோக்கியமரி
யிலகுங்கற்புத்
திண்யவா ரோக்கியமரி செல்வவா ரோக்கியமரி
சிறந்துவாழி. (97)

பணிமாலை நவரத்னம் பதிமாலை பரிமளம்
பரவு ரோஜா
வணிமாலை முதலாக வலர்மாலை வாடுமென
வாய்ந்த ஞானத்
துணிமாலை செந்தமிழிற் சுகமாலை தருமராஜு
தூய்க்குடும்ப
மணிமாலை சூட்டினன் மதிமாலை யெனவோங்கி
வாழ்கமாதோ. (98)

## பிரார்த்தனை.

### கொச்சகப்பா.

தருமராஜு கொண்டப்ப தான்கொண்ட வெண்ணமெலா
மொருகுறைவு மின்றியே வோங்கவைத்தா யதுபோற்சீர்ப்
பெருகுமிவ் வுலகமதிற் பேரறிவா லவர்நினைத்து
வருமவற்றைப் பூர்த்திசெய மகிழ்ந்தருளு வாய்ப்பரமே. (99)

## மங்களம்.

### நேரிசை வெண்பா.

தங்கும் புகழ்புதுவை தர்மராஜு கொண்டப்பா
வெங்கும் புகழ்குடும்ப மெக்காலும்—மங்களமாய்
தக்கசுக மோங்கியே சார்ந்த மதுரகவி
மிக்கதமிழ் வாழ்கபுவி மேல். (100)

சுபம்!

